26th April 1962]

THE HON. SRI R. VENKATARAMAN : ரொம்பவும் சந்தோஷம். தென் ஆற்காடு மாவட்டத்திலே எங்கே அமைப்பது என்பது பரிசீலனையில் இருக்கிறது.

SRI A. DURAIYARASAN : தஞ்சை மாவட்டத்திலே அரந்தாங்கியில் ஒரு நூற்பாலை வைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு கூட்டுறவு நூற்பு ஆலை வைப்பது என்று சொன்னால் சற்றேறக்குறைய 14 லட்சம் ரூபாய் வசூல் செய்வதற்கு வசதி இருக்கவேண்டும்.

* 8 Q.—SRI P. V. SRIRAMULU : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is a proposal to start a co-operative spinning mill at Krishnagiri, and

(*b*) if so, the stage at which the matter stands?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Government have not received any specific proposal to set up a Co-operative Spinning Mill at Krishnagiri. Government are at present examining the possibilities of setting up a few more Co-operative Spinning Mills in the State. The location of these mills will be decided in due course.

SRI P. V. SRIRAMULU : உடனடியாக அங்கு கூட்டுறவு நூற்பாலை அமைக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : பரிசீலனை செய்யப்படும். அங்கு நிதி எவ்வளவு வசூல் செய்யப்படுகிறதோ அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது.

SRI S. MADHAVAN : இந்தக் கூட்டுறவு நூற்பாலை ஏற்படுத்துவதில் தனியார் துறையில் உள்ளவர்களுக்கு அங்கம் தரப்படுமா?

(பதில் இல்லை.)

SRI RAMA ARANGANNAL : காஞ்சியில் ஒரு நூற்பு ஆலை ஏற்படுத்த உத்தேசம் உண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு நூற்பாலை வைக்க சாங்ஷன் ஆகிவிட்டது.

*Election Posters*

*9 Q.—SRI M. KARUNANITHI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தேர்தல் சுவரொட்டிகளின்மீது நடவடிக்கை எடுக்குமாறு மத்திய சர்க்காரிடமிருந்து தமிழக சர்க்காருக்கு தகவல் வந்துள்ளதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**Sri M. KARUNANITHI :** மாவட்ட தேர்தல் அதிகாரிகள் வேட்பாளர்களிடமிருந்து அவர்கள் தேர்தல் சமயத்தில் வெளியிட்டிருந்த பிரசுரங்கள், துண்டுதாள்கள், சுவரொட்டிகள் முதலியவற்றைக் கேட்பதற்குக் காரணம் என்ன?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** எலக்ஷன் கமிஷனரும், மத்திய அரசாங்கமும் தேர்தல் பிரசாரம் எவ்வாறு நடைபெற்றது என்று தெரிந்துகொள்ள விரும்பினார்கள். அதற்காக இந்த விவரங்களெல்லாம் சேகரிக்கப்படுகின்றன.

*Midday Meals Committee (Report)*

* Q.—Sri M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Finance be pleased to place on the Table of the House a copy of the Report of Midday Meals Committee together with a statement of action taken by the Government on the recommendations of the Committee?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** The report of the Committee is under examination and it will be placed on the Table of the House along with the orders of Government on the Report as soon as the examination is completed.

**Sri M. KALYANASUNDARAM :** இந்தக் கமிட்டி எப்போது தங்களுடைய அறிக்கையை அரசாங்கத்திடம் சமர்ப்பித்தது. அரசாங்கம் அதன்மீது முடிவு இவ்வளவு எடுப்பதற்கு தாமதம் ஆவதற்குக் காரணம் என்ன?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** இந்தக் கமிட்டியின் அறிக்கை 4-3-1961-ல் சமர்ப்பிக்கப்பட்டது. அதன் பிறகு டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷனுடைய அபிப்பிராயங்களைக் கோரப்பட்டது. மேலும் பரிசீலனை செய்யப்பட்டது. ஆனால் முன்பு இருந்த அரசாங்கம் தேர்தலுக்குப் பிறகு அதை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்தது. ஆகையால்தான் இதுவரையில் முடிவு செய்யப்படவில்லை. இனிமேல் பரிசீலனை செய்து முடிவு எடுக்கவேண்டும்.

**Sri M. KALYANASUNDARAM :** தேர்தலுக்கு முன்பே கிட்டத்தட்ட 11 மாதகாலம் அரசாங்கத்திற்கு அவகாசம் இருந்தது. இது ஒரு சாதாரண விஷயம் என்று கருத முடியாது. இந்தக் காலதாமதத்திற்குக் காரணம் கல்வி அதிகாரிக்கும் சர்க்காருக்கும் ஏதோ கருத்து வேற்றுமைதானா?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** கருத்து வேற்றுமை இருப்பது எனக்குத் தெரியாது. முந்திய அரசாங்கம் ஏன் முடிவு செய்யவில்லை என்பதை விளக்கினேன்.